[10th September 1960

கணக்கு எடுப்பது வழக்கம். அப்படி இப்பொழுது வழக்கமாக எடுக்கிறார்களா? அந்த லெஜிட்டிமேட் ட்யூட்டியை தடுப்பதற்கு யாராவது ஏதாவது செய்கிறார்களா?

MR. SPEAKER: The hon. Member has put his question very cleverly. (Laughter). It is out of order.

*Land Colonizing Societies*

* 611 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

1959–60-ல் நிலமில்லாத விவசாயிகளுக்கு எந்தெந்த இடங்களில் நிலக்காலனி சொசைடிகள் ஆரம்பிக்கப்பட்டன?

THE HON. SRI P. KAKKAN: A statement [a] showing the places where the land colonisation societies were organised during 1959-60 is placed on the Table of the House. The question of giving financial assistance to the societies is under the consideration of the Government.

SRI S. M. ANNAMALAI: மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையில் வட ஆற்காடு மாவட்டத்தில் ஒன்று கூட காணோம். காரணம் என்ன? அந்த மாவட்டத்தில் ஏதாவது சொஸைட்டிகள் ஆரம்பிக்கவேண்டுமென்று மனு வந்ததா? அதை பரிசீலித்தார்களா?

THE HON. SRI P. KAKKAN: சொஸைட்டி ஆரம்பிக்கிறதாகயிருந்தால் போதுமான இடங்கள் இருக்க வேண்டும். என்னிடமுள்ள தகவல்படி, இந்த ஜாபிதாவில் உள்ள இடங்களில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நிலங்கள் இருந்தால் பின்னால் கவனிப்பார்கள்.

* 612 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960–61-ம் வருடத்தில் ஹரிஜன விவசாயிகளுக்கு எத்தனை நிலக்குடியேற்ற சங்கங்கள் ஏற்படுத்துவதற்கு திட்டமிடப்பட்டிருக்கிறது ?

(ஆ) பதிவு செய்யப்பட்டிருக்கும் நிலக்குடியேற்ற சங்கங்களிலே எத்தனை ஹரிஜன விவசாயிகள் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள்?

THE HON. SRI P. KAKKAN: (*a*) It is not possible to indicate any definite figure as the Organisation of Land Colonisation Co-operatives depends on various factors like the availability of lands, provision of funds, etc.

(*b*) About 3,094.

---

[a] Printed as Appendix V on page 674 infra.